பட்டதனைக்குப்பத்திற்கும் குப்பத்தில் நடைபெறுத லைப்பாக்கத்திற்கும் ஏற்றி அவர்பொருளுரைத்தது போலியுரையாமென்க.

(உஅ-கூ) கொள்ளை-விலை. பணை-குதிரை இலா யம். புறவு-புறம்பு. 'உருகெழுதிறலுயர் கோட்டத்து' என்பதற்கு நச்சினார்க்கினியருரைத்த பலபொருளுங் காண்க. 'கோட்டம்' கரையுமாம், கோயிலுமாம்.

(சo-ருo) போர்க்கதவு - வாய்பொருந்தின கதவு கள்; "போரமை புணர்ப்பின்" என்றார் நெடுநல் வாடையினும். ஓவம்-சித்திரம்; ஓவத்தன்ன இட னுடை வரைப்பின்" என்றார் புறத்திலும்.

(ருக-ருஉ) கேணித் தகை முற்றம்-கேணிகளை உள் அடக்கின முற்றம்; தகைதல்-உள்ளடக்குதல்.

(ருஉ-ருஅ) 'முனிவர் வேட்கும் புகையை வெறுத் தலாற் குயில்கள் சோலையைவிட்டுக் காளிகோட்டத்திற் போய்த் தூதுணம்புறாக்களோடும் ஒருபுறத்தே தங் கும்' என நேரே பொருள்படுதலை விடுத்து நச்சினார்க் கினியர் காளிகோட்டத்தைப் புறாக்களுக்கு விசேடண மாக்கிப் பின் அப்புறாக்களோடுங் குயில்கள் காவிலே சென்றிருக்குமெனக் காவுடனே சேர்த்துப் பொரு ளுரைக்கின்றார். அங்ஙனம் பொருளுரைப்பின் முனிவர் வேள்விவேட்குமிடம் இதுவென்பது பெறப்படாமை யானும், குயில்கள் எவ்விடத்தைவிட்டு எங்கேபோ யிருந்தனவென்று வினவுவார்க்கு இறுக்கலாகாமையா னும் அஃதுரையன்றென மறுக்க. தவப்பள்ளிகளுள்ள காவிலே முனிவர்வேட்கின்றாரென்றும், அங்கெழும் புகையை வெறுத்து அச்சோலையை நீங்கிப்போய்க் குயில்கள் காளிகோட்டத்திற் றங்குகின்றனவென்றும்

பொருள்கூறுதலே பொருத்த முடைத்தாதல் காண்க. காளிகோட்டம் நகர்ப்புறத்தே உள்ளது; முனிவர் வைகுங் கா அதற்குஞ் சேய்த்தாய் உள்ளதென்க. கடி நகர்-அச்சந்தருங் காளிகோட்டம். தூறு-சிறுகல்.

(௫௯-எச) கருந்தொழில் - கொலைத்தொழில். கொலைத்தொழிலினும், இரும்புமுதலான வலியஉலோ கங்கள் அடித்துத்திரட்டுந் தொழிலினும் பழகியகை யைக் 'கருங்கை' என்பர்; "கொன்றுவாழ்தொழிலி னும் வன்பணித்தொழிலினுங், கன்றியதொழிற்கை கருங்கை எனப்படுமே" என்பதூஉங்காண்க. 'கருந் தொழிற்கலிமாக்கள்' என்பதற்கு நச்சினார்க்கினியர் 'வலியதொழிலையுடைய செருக்கின பரதவர்பிள்ளை கள்' என்றுபொருளுரைத்து 'இவர் (௯௯) கடலிறவின் சூடுதின்றும், (௬௪) வயலாமைப் புழுக்குண்டும், (௯௫) வறளடம்பின் மலர்மலைந்தும், (௯௯) புனலாம்பற் பூச் சூடியும், (௯௫) கோண்மீன்போல' என்றுசேர்த்துக் கொண்டுபோய்ப்பின் (எஎ) 'ஏழகத்தகரொடு சிவல் விளையாட' என்பதனோடு ஓரியைபுமின்றிக் கூட்டி முடித்து இடர்ப்படுகின்றார். 'கலிமாக்கள்' என்பதற் குச் சிறுபிள்ளைகள் என்று பொருள் கொண்டமை யானே 'விளையாட' என்னும் வினைவந்தஇடம்பார்த்து இணக்கி இவ்வாறுபோலியுரைகூறினார். அதன்பின் எ௯-இல் உள்ள 'இகன்மொய்ம்பினோர்' என்பதனைப் பிரித்தெடுத்துக் கொண்டுபோய் ௯0-இல் உள்ள 'வரி மணலகன்றிட்டை' என்பதனோடு சேர்த்துத்திரும்ப வும் எ0-இல் உள்ள 'தீண்டி' முதலியவினைகளோடு சேர்த்துப்பிறகு அதனை உஎ-இல் உள்ள பாக்கத்தோடு இயைத்துப் பெரியதோர்இடர்விளைத்துப் பாட்டின்

பொருணயஞ் சிதைத்தார். இவர்போல் இங்ஙனம் உரைக்குழப்பஞ்செய்வார் பிறரை வேறுயாண்டுங்கண் டிலம். சிறார் விளையாட்டையும், வலியபெருமக்கள் போர்விளையாட்டையுந் தனித்தனியே கூறவேண்டு மெனக்கருதிய தங்கருத்தை, அக்கருத்துக்குச் சிறி தும் இடந்தராத ஆக்கியோன் திருப்பாட்டில் இயைப் பான்வேண்டி அதனை அங்ஙனமெல்லாம் அலைத்து வரம்பின்றி யுரைகூறத்துணிந்தது அவர்க்குப் பெரி தும் ஏதமாம் என்க.

இனிக் 'கருந்தொழிற் மாக்கள்' என்பதற்கு மீன்பிடிக்குங் கொலைத்தொழிலிற்பழகிய வலியசெம் படவர் எனவைத்து நேரேபொருளுரைத்துச் சென் றால் இப்பகுதி ஆற்றொழுக்காய்ப் பொருள் பயந்து செவ் விதின் முடியுமாறறைப் பொருட்பாகுபாட்டில் வரைந் த பொழிப்புரைக்கட் காண்க. 'கலிமாக்கள்' என்பதற் குச் சிறார் என்று பொருளுரைத்தற்கு அதிகார வியைபு இடந்தராமையோடு அற்சொற்றொடரும் இடந்தருவதின்றாம்; என்னை? சிறுமகார்க்குக் கருந் தொழில், வலிய, செருக்கிய முதலான அடைமொழி கள் ஏலாமையானும், மாக்களென்னுஞ்சொல் அப் பொருடராமையானு மென்பது. மற்றுக் கிடந்தவாறே வைத்துக் 'கலிமாக்கள்' செம்படவர்எனப் பொருளு ரைப்பின், 'இகன்மொய்ம்பினோர்' என்பதும் அவரை யேகுறித்துநின்று கூறியதுகூறலாமெனின்; அற் றன்று, செம்படவர் மேற்சொன்னவாறு 'கையினுங் கலத்தினும் மெய்யுறத் தீண்டிப்' போர் இயற்றியும் அதனானும் தம் வலியடங்காமையின் 'மாறுபட்டஇ

லுடையராய்க்' கவண்கல் வீசுவாராயினரென்று உரை கூறக் கிடத்தலால் அது கூறியதுகூற லாகாதென்க.

வறள்அடம்பு-வறண்டமணலிற் படர்ந்த அடப்பங்கொடி; இக்கொடி கடற்கரை மணலிற் படருமென், பது நெய்தற்கலி (கo) யுள்ளும், பதிற்றுப் பத்திலுள்ளும் (ரு0, ருக) கூறப்படுதலின் இது 'வறள்' என்னும் அடைபடுத் துவந்தது.

(எரு-எஎ) 'உறை' என்பது மண்ணாற்சுவர் போற் சூழ்வளைந்து ஓரடிக்குமேல் உயரமாக்கிச் சுள்ளையில் வைத்துச் சுட்டெடுப்பது. நிலத்தை அகழ்ந்து இவ்வாறுசமைத்த உறைகளை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கிச்செய்வது 'உறைக்கிணறு' என்றுசொல்லப் படும். மேழகத்தகர்-துருவாட்டின் ஆண்; இதனை 'ஏழகம்' என்றும் வழங்குப; இவ்விருசொல்லுந் துருவாட்டின் ஏற்றுக்குப் பெயராதல் திவாகரத்துங் காண்க. சிவல்-கௌதாரிப்பறவை. புறச்சேரி-இழிதொழிலாளரான செம்படவர் நகர்க்குப் புறத்தேயிருக்கும் ஊர்; இது குப்பத்தை அடுத்துள்ளதாகும்.

(எஅ-கoரு) கிடுகுநிரைத்து எஃகு ஊன்றி-கேடகத்தை வரிசையாவைத்து வேலை ஊன்றியென்க. நடுகல்லின் அரண்-நட்டகல்லையே இடமாய்க்கொண்டு நின்றவீரன் என்க. இவ்வாறன்றி, இறந்துபட்டவீரனுக்கு அறிகுறியாக அல்லது நினைவுக்குறியாக நிறுத்திய கல்லையுடைய காவலிடம் என்று பொருளுரைத்தலுமொன்று. நடுகல் நின்ற இவ்வரணத்தைத் தூண்டிற்கோல் சார்த்திய செம்படவர் குடிசைவீட்டுக்கு ஆசிரியர் உருத்திரங் கண்ணனார் வெளிப்படையாக உவமை கூறுதலையும் அறியாது, நச்சினார்க்கினியர்

இவ்வடிகளைப் பிரித்தெடுத்துக்கொண்டுபோய் எக-வது அடியிலுள்ள 'புறக்கொடாஅது' என்பதனோடு இயைத்து ஒருபோலியுரை கூறினர். அங்ஙனங் கூறுதற்கு ஓரியைபின்மையானும், ஆசிரியர் கருத்துக்கு மாறாய் உவமமின்றிப் பிறழ்தலானும் அவருரை பொருந்தாதென மறுக்க.

'நெடுந்தூண்டிலிற்காழ்' என்றமையான் அதனோடு இனமான மீன்இடும்புட்டிலும் ஈண்டுக்கொள்ளப்படும். கேடகம் மீனிடும் புட்டிலுக்கும், வேல் தூண்டிற்கோலுக்கும் உவமைகளாம்.

சினைச்சுறவின் கோடுநட்டு மனைச்சேர்த்திய வல்லணங்கினல்-கருக்கொண்ட சுறாமீன் கொம்பைநட்டு அதனையே இருக்குமிடமாகச் சேர்த்த வலியகடற்றெய்வத்தின் பொருட்டு. மனை-இருக்குமிடம்; இச்சொல் இப்பொருள்படுமாகவும், நச்சினார்க்கினியர் இதனைக் கொன்னே வேறுபிரித்துப்போய் அஙு-வது வரியிலுள்ள 'மனைமுன்றில்' என்பதனோடு கூட்டினர். "நெய்தனிலத்தில் நுளையர்க்கு வலைவளந்தப்பின் அம்மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கோடு நாட்டிப் பரவுக்கடன்கொடுத்தலின் ஆண்டு வருணன் வெளிப்படும்" என்பது பொருளதிகாரத்தில்நச்சினார்க்கினியருரைத்தவுரை.

மடிதல்-தந்தொழில் செய்யாது சோம்புதல். காவிரித்துறைக்கு உவமையாய் நேரேசென்றியைவதாகிய 'பெறற் கருந்தொல்சீர்த் துறக்கம்' என்னும் அடியை கககக-வது அடியிலுள்ள 'நெடுங்கால்மாடம்' என்பதனோடு இயைத்து இடர்ப்படுகின்றார் நச்சினார்க்கினியர். கவலையின்றிப் பல்பயன் நுகர்ந்து பரதவர் தம்

மகளிரோடும் இனிது விளையாட்டயர்கின்ற காவிரித் துறையைத், தேவர் அரம்பைமாதரோடும் விளையாடு கின்ற துறக்கத்திற்கு உவமை கூறுதலே நிரம்பவும் பொருத்த முடைத்தாம் என்க.

(௧௦௯-௧௧௫) துணை - கணவன். மது - காமத் தேன். கொடிஞ்சியில் - முன்வளைந்த கட்டுமரம், அல்லது மீன்படகு, தோணி எனவும் ஆம். குருஉச்சுடர்- நிறஞ்சிறந்த விளக்கு. கண் அடைஇய - கண் அடைத்த, அதாவது கண்டுயின்ற.

(௧௧௬-௧௨௫) எக்கர் - காவிரியாற்றுநீர் கொண்டு வந்து திரட்டிய இடுமணல். இவ்வெக்கர்மணலிமேல கடையாமத்தில் துயில்கொண்டு கிடப்பார் சுங்கங் கொள்ளுங் காவலாளர் என்பது நேரே பொருள்படுவ தாகவும், இதனைவிட்டு நச்சினார்க்கினியர் அதனைப் பரதவர்மேலேற்றி அவர் அம்மணன்மேற் கண் டுயின்று கிடப்பரென வுரைகூறி, மற்றை நாளில் அப் பரதவர் 'வெறியாடு மகளிரொடு' கூடி விழாவெடுப்ப ரென ௧௫௫-வது வரியோடு கொண்டுபோய்க் கூட்டி முடித்திடுகின்றார். இப்பாட்டுச் செல்லுநெறியை ஒரு சிறிது நோக்குவார்க்கும் இவருரை பொருந்தாமை நன்குதெளியப்படும். சுங்கங்கொள்வோர் தங்கடமை வழாது இரவிலுஞ் சாவடியிலிருந்தவாறே காவலாய் எக்கர்மணலிற் றுயில்கொள்வரெனக் கிடந்தவாறு வைத்துரைத்தலே பொருட்சிறப்புடைத்தாமன்றிப், பரதவர் உறங்கினரென வாளாது கூறல் சிறவா தென்க,

வேலாழி - கடல், ஈண்டு ஆகுபெயராற் கடற் கரை. இனிவேலா ஆழி எனப்பிரித்துக் கரையுங் கட

லுமென உரைத்தலுமொன்று; இவ்வாறு கொள்ளின் 'தாழை வேளாழிவியன்றெருவில்' என்பதற்குத் 'தாழைவளர்ந்தகரையினையும் கடலருகே நின்ற அகன்ற தெருவினையுமுடைய' என்று பொருளுரைக்க; வேளா ஆழி என்பவற்றில் ஆழி என்பதன் முதல் தொக்கு வேளாழி என்றவை புணர்ந்தன. உல்கு-சுங்கம்; "உறுபொருளும் உல்குபொருளும்" என்னுந் திருக்குறளிலும் இஃது இப்பொருட்டாதல் காண்க.

(கஉ௫-கசக) வலியுடை வல்அணங்கின் நோன் புலி-வலியுடைமையால் வலிதேவருத்து மியல்பினதான வலியபுலியினையாளர்; 'புலி' உவமவாகுபெயர். பண்டம் பொதிமூடை-பண்டங்கள் பொதிந்தமூட்டை. வருடை-ஒருவகைமான். ஏழகம்: மேழகம் என்பன ஆட்டுக்கிடாய் என்னும் ஒருபொருளை யுணர்த்துவனவாம்.

(கசஉ-க௫அ) குறுந்தொடை-அணுகினபடிகள். படிக்கால்-ஏணி. பல்தகைப்பு-வீட்டின் பலபகுதிகள்: கட்டுகள். வளிநுழையும்வாய் - தென்றற்காற்றுப் புகும் சாளரம். நுண்தாது உறைக்கும்-நுண்ணிய மகரந்தப் பொடியைச் சொரியும்; "புன்னை நுண்டாதுறைத்தரு நெய்தல்" என்னும் ஐங்குறுநூற்றிற் போல. துடிப்பு - கணு. ஆவணம்-கடைத்தெரு.

(க௫௯-கஅ௫) மையறுசிறப்பிற் றெய்வஞ்சேர்த்திய மலர் அணிவாயிற் பலர் தொழுகொடி-குற்றமற்ற சிறப்பினையுடைய தெய்வத்தை ஏற்றுவித்து மலர்களணிந்த கோயில் வாயிலிலே பலருந் தொழுதுசெல்லுங் கோழிக்கொடி என்க. நின்றவாறே சென்று

இயைந்து இங்ஙனம்பொருடருவதாகிய 'மையறுசிறப் பிற்றெய்வம்' என்னுஞ் சொற்றொடரைப்பிரித்தெடுத் துப்போய், முருகனுக்கும் ஏனைத்தெய்வங்களுக்கும் எடுத்த விழா அறாத ஆவணம் என்றுகூட்டி நச்சினார்க் கினியர் இடர்ப்படுகின்றார். கறு௯-வது வரிமுதல் கொடிச்சிறப்புக் கூறப்புகுந்த ஆசிரியர் மற்றைக் கொடிகளைக் கூறுதற்குமுன் தெய்வத்தன்மையுடைய கோழிக்கொடியை முதலிற் கூறக்கருதி முருகப்பிரான் கோயில்வாயிலிற் கட்டப்பட்டிருக்குமதனைக் கூறிய நுணுக்கமறியாது நச்சினார்க்கினியர் தாம் ஒருபொருள் கூறுவான் புகுந்து இழுக்கினார்.

கூழ்-உணவுப்பொருள். மஞ்சிகை-பேழை. பண் ணியம்-பலபண்டம். பாகு உருத்த பசுமெழுக்கிற்காழ்-பாகாகக்காய்ச்சிவார்த்த பசிய மெழுக்கைப் பூசிய கோல். கிடுகு-சட்டம்; இச்சொல் முன்னொருகால் கேட கம் என்னும் பொருளில் வந்தவாறுகாண்க. 'பாகு உருத்த' என்பதற்கு இப்பொருள் காணமாட்டாத நச்சினார்க்கினியர் இதனை 'மஞ்சிகை' என்பதனோடு சேர்த்துப் 'பாக்கு வெற்றிலை சொரிந்தமஞ்சிகை' என்று பொருள் கூறினார். அவ்வாறியைத்தற்குச் செய்யுளிடந்தாராமையின் யாங்கூறியதே பொருளென வறிக; சிறார் ஏறுமைப்பொருட்டுக் கோல்களில் மெழுக்குத் தடவி நாட்டுதல் உண்டு. இனி 'மெழுக்கு' என்பதற்குச் 'சாணத்தால் மெழுகுதல்' என்றுரை கூறினருமுளர்; அது பொருந்தாமைகண்டுக் கூறிய வாற்றாற காண்க. 'கரும்பின் ஒண்பூப்போல மேலூன் றிய துகிற்கொடியும்' என்க.

'துவன்று இருக்கைத் தூங்குநாவாய்' எனமாற்

றிக் கூட்டி 'நிறைந்த இருப்பினையுடைய அசையும் மரக்கலன்கள்' என்க.

நறவுநொடை- கள்விற்றல். பதாகை (வடசொல்)- பெருங்கொடி.

(கஅரு-ககூரு) காலின்வந்த கருங்கறிமூடை-வண்டியிற் கொண்டுவந்த கரிய மிளகுபொதி. கால்-உருள்; அஃது இங்கே உருளையுடைய வண்டியை உணர்த்திற்று; இச்சொல் இப்பொருட்டாதல் "கால்பார் கோத்து" என்னும் புறப்பாட்டிற் காண்க. "ஒருங்கு தொக்கன்ன வுடைப்பெரும் பண்டங், கலத்தினுங் காலினுந் தருவனரீட்ட" * என்புழி அடியார்க்கு நல்லார் உரைகூறியவாறே 'வழியிற் கொண்டுவந்த' என்றுரைப்பினுமாம். இப்பொருள் கூறவறியாத நச்சினார்க்கினியர் 'நீரிற்காலில்வந்த' என் இரண்டிடத்துக் கூட்டிக் 'கடலிலே காற்றான்வந்த' வெனப்பொருந்தாவுரை வரைந்தார். குடமலை-குடகுமலை; அல்லது மேற்கணவாய்மலை; காவிரிப்பூம் பட்டினத்திற்கு மேற்கிலுள்ளதுவாகலின், ஈண்டதனைக் கூறுதலே பொருத்தமாம்; பொதியம் தெற்கேயுள்ளதாகலின் அதனைக் கூறுதல் பொருந்தாது. ஈழம்-இலங்கை.

(ககூரு-உகஉ) துறைமுகத்து நீரில் உலாவும் மீனும் கரையிற் றிரியும் யாடு முதலான விலங்குகளும் நீரிலும் நிலத்திலும் இடரின்றி உறங்கிச் செம்படவர் குடிசை முற்றத்திலும் ஊன்விற்றற் றொழிலையுடையார் குடிசையிலும் தாவிப்பாய்ந்து திரண்டும் நிற்கும் என்க. இங்ஙனம் நெறிப்படப் பொருளுரையாது நச்சினார்க்கினியர் 'புரவி மூடை மணிபொன் முதலியன நீரி

* சிலப்பதிகாரம், மனையறம் படுத்தகாதை.

னும் நிலத்தினும் இனிது தங்கி வளம் மயங்கிய மறுகு' என்றிடர்ப்பட் டியைக்கின்றார். 'துஞ்சி' என்னுஞ் சொல்லுக்கு 'உறங்கி' என்னுஞ் செம்பொருளும் அதற்கேற்ற மீன், மாமுதலிய உயிருடைப் பொருள்களும் உளவாகவும், அவற்றைவிடுத்து அச்சொல்லுக்குத் தங்கின ஆக்கப்பொருள்கொண்டு அவ்வாறு இயைத்தது தீம்பாலுணவிருப்ப அதனை உவர்த்தொதுக்கி அறிவுமயக்குங் கள்ளுண்பார் திறனேடொப்பதாயிற்றென்க.

மேலும், உகஎ-வது வரியிற் பலவேறு மொழி வழங்கும் பலதேயமாக்களுங் காவிரிப்பூம்பட்டினத்தில் வந்துறைவரெனக் கூறிய பகுதியை ஆண்டு நின்றும் பிரித்தெடுத்து வந்து அவர் உறையும் மறுகு என ஈண்டிதனோடு வரன்முறையின்றி முடிக்கின்றார் நச்சினார்க்கினியர்.

கிளைகலித்து-கொல்வாரின்மையின் தம் சுற்றம் பல்கி.

பண்ணியம்-தின்பண்டம். நுகம்-குறுக்குக்கட்டை. பகல்-அதன் நடுவில் தைத்த ஆணி. கொண்டி-மிகுந்தபொருள்.

(உகசு-உகஅ.) 'புலம்பெயர் மாக்கள் பல்லாயமொடுபதி பழகிக் கலந்தினிதுறையும்' எனக் கூட்டுக. பல் ஆயமொடு பதி பழகி-பல தொகுதியாகக் காவிரிப்பட்டினத்திலுறையும் நன்மக்களோடும் ஒருமித்தும் பழகி. வேறு வேறு உயர்ந்தமுதுவாய் ஒக்கல்-வேறு வேறாகச்சிறந்த அறிவுவாய்த்த சுற்றத்தாரையுடைய நன்மக்கள். வேறு வேறாக அறிவுசிறத்தலாவது பல திறப்பட்ட நூல்களிற்பயின்று முதிர்ந்தஅறிவு வாய்த்

தல். பலதிறப் பட்ட அறிவுடைய நன்மக்களெல்லாரும் திருவிழா நடைபெறும் ஓரிடத்திற்சென்று கூடுதல் போலப் பலதிறப்பட்ட மொழிகள்வழங்கும் பலதேயத்தாரும் இந்நகரத்திற் குழுமுவர் என்க. 'வேறு வேறுயர்ந்த' என்னும் அடைமொழித் தொடரை நச்சினார்க்கினியர் புலம்பெயர் மாக்களோடு கூட்டுகின்றார்; அங்ஙனமுரையுரைத்தல் வேண்டாகூறலேயாமென்க.

(உஉ0-உ௩௧) பிணிஅகம் = சிறைக்களம். பீடுகாழ் முற்றி-தன்பெருமைத்தன்மை வைரம்ஏறி முதிர்தலால். காப்புஏறி-மதிலேறி. வாள்கழித்து-மதிற்புறத்திருந்த வாட்படைவீரரை ஓட்டி. தூறு இவர் துறுகல்-குறுஞ்செடிபடர்ந்த நெருங்கிய பொறைக்கல், அல்லது சிறுகுன்று, "வேங்கைமாத்தகட்டொள்வீ தாயதுறுகல்" என்றார் புறத்திலும். 'உழிஞை' சிறுபூளை எனப்படுமென்று திவாகரத்துட் சொல்லப்படுதலின், அதனோடினமான பெரும்பூளையுஞ் சூடினரென்று ஆசிரியர் கூறிய கருத்தறியாது, நச்சினார்க்கினியர் இச்சொல்லை உசக-ஆம் அடியிலுள்ள 'மயங்கி' என்பதனொடு கூட்டியுரை கூறுகின்றார். 'பொய்கை, செருந்தி நீரற்று' நீடி எனக் கூட்டுக.

(உச0-உசரு) அறுகோட்டு இரலை - அறுப்பறுப்பான கொம்புள்ள கலைமான். மான்பிணை-பெட்டைமான்.

(உசசு-உருக) கொண்டிமகளிர்-சிறையாகப் பிடித்துக்கொள்ளப்பட்ட மகளிர். 'கொண்டி' முன்னே 'மிகுபொருள்' என்னும் பொருளில் வந்தது காண்க. கந்து-தெய்வம் உறையுந்தறி: சிவலிங்கம். பொதியில், அம்பலம் என்பன கோயிலென்று பொருளுணர்த்தும்.

(உருஉ-உகூ0) 'அறுகை' என்பதில் ஐசாரியை ; அறுகம்புல், "அறுகையு நெருஞ்சியு மடர்ந்து" என்றார் மணிமேகலையினும். அழல்வாய் ஓரி அஞ்சுவரக் கதிர்ப்பவும்-அழன்ற வாயினை யுடைய முதுநரிகள் பிறர்க்கு அஞ்சுதல் உண்டாக ஓங்கி ஊளையிடவும் எனக. கூகையில் ஓர் இனம் ஆந்தை எனவும் பிறிதோர் இனம் கோட்டான் எனவும் வழங்கப்படும் என்பர் ; இங்கேகூகைஎன்பது ஆந்தை. ஆண்டலை-கோட்டான் போல்வதொருபறவை ; இதன்றலை ஆண்மக்கள் தலை போலிருத்தலின் இப்பெயர் பெறுவதாயிற்றென்க, "புலவூண்பொருந்திய குராலின் குரலும், ஊண்டலை துற்றிய ஆண்டலைக்குரலும்" என்றார் மணிமேகலையினும்.

(உகூக-உகூஅ.) கொடுங்கால் மாடம் - கால்கள் வளைத்து அழகாகக் கட்டப்பட்டமாடம். 'கொடுங்கால்' என்னும் இவ்வடைமொழியை நச்சினார்க்கினியர் பேய் மகள் என்பதனோடு வறிதே இயைக்கின்றார்.

'விருந்து ஆறாது உண்டு' எனமாற்றுக ; 'உண்டும்' என்பதில் உம்மைதொகுத்தல்.

வறுங்கூடு - வறிதாய்ப்போன நெற்கூடு.

சாவிற்கு முற்குறியாகக் கூகை நடுப்பகலிற் குழறுதலைப் "பேணாரகநாட்டு, நன்பகலுங் கூகைநகும்" என்னும் புறப்பொருள் வெண்பாவானும் உணர்க, வஞ்சிப்படலம், [redacted]

(உகூகூ-உககூ)-ஞாயில் - அம்பெய்வதற்கு மதின் மேற் சமைத்த ஒரு மதிலுறுப்பு ; இதனை அடியார்க்கு நல்லார் 'குருவித்தலை' என்பர் [redacted]

---

* சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, உசஎ-ஆம் வரி.

*விசிபிணிமுழவு* - இறுகக்கட்டின வார்க்கட்டையுடைய முரசு.

இனி இங்ஙனம் வருத்துக்கொண்டு உரைகூறிய பொருத்துவாய்களையெல்லாம் ஒருமுடிபாக்கி இப்பாட்டின் வினைமுடிபுகாட்டுகின்றாம். இதன்கட்போந்த இருபத்தேழு பொருத்துவாய்களையும் பொருட்பாகுபாட்டிற் காண்க. இங்கு முடிபுமாத்திரையே வரைகின்றாம்.

நண்ணார் காப்பு ஏறி வாள்கழித்துத் தாயம் எய்தி அங்ஙனம் எய்தியமையானும் மனம்மகிழானுப் போர் வேட்டுச் சமம்முருக்கித் தன்பணைகளை அழித்துச் செறவும் வாவியும் மயங்கவும் பொதியிலில் யானை உறையவும் மன்றத்து ஓரி கதிர்ப்பவும் ஆண்டலை விளிப்பவும் பேய்மகள் துவன்றவும் செழுநகர் வறுங்கூட்டுள்ளிருந்து கூகை குழறவும் ஊர்களின் அழியப் பெரும்பாழ்செய்தும் அமைதி பெறானுய்த் தான் முன்னியதுறை போகலிற் பல்லொளியர் ஒடுங்க அருவாளர் தொழில்கேட்ப வடவர்வாடக் குடவர் கூம்பத் தென்னவன் திறல்கெடச் சீறிக் கண்ணாற்செயிர்த்து நோக்கிப் பொதுவர் வழிபோன்ற இருங்கோவேள் மருங்குசாயக் காடுகொன்று நாடாக்கிக் குளந்தொட்டு வளம்பெருக்கி உறந்தை போக்கிக் குடிநிறீஇப் புழை அமைத்துப் புதைநிறீஇப் பெயர்கொடுத்துப் புறக்கொடாது வேந்தர் சூடிய கழறகாலினையும் புதல்வரும் மகளிரும் திளைக்கும் மார்பினையும் பெருவலிமையினையும் உடைய திருமாவளவன் தெவ்வர்க்கு ஓக்கியவேலினும் யாம்போதற்கு எழுந்த கானம் கொடியதாயிராநின்றது; அவன் செங்கோலினும் என்காதலியின் மென்றோள்கள் குளிர்ந்தனவா யிருக்கின்றன; ஆக

வின், காவிரி பொன்கொழிக்கும் கழனியினையும், பாக்கத்தினையும், பூந்தண்டலையினையும், ஏரியினையும், அரண்மனை அட்டிலையும், சாலையினையும், காளிகோட்டத்தினையும், மன்றம் புறச்சேரி முதலியவற்றை யுடையனவாய்த் துறக்கம் ஏய்க்கும் பெருந்துறையினையும், உல்கு செய்வோர் மடியாதிருக்கும் பண்டசாலை முன்றிலினையும், விழவறாத ஆவணத்தினையும், செழுநகர் வரைப்பினையும், நனந்தலை மறுகினையும், வேளாளர் துவன்று இருக்கையினையும் உடையதாய்ப் பலமொழி வழங்கும் பலதேயத்தாரும் போந்துஉறையப்பெற்ற தாய் உள்ள காவிரிப்பூம்பட்டினத்தையே அவ்வேந்தர் பெருமான் பரிசிலாகத் தரப்பெறுவேனாயினும் கூந்தல் இழை முதலியவற்றையுடைய என் ஆருயிர்க் காதலியைப்பிரிந்துவருதற்கு ஒருப்படமாட்டேன் கண்டாய் நெஞ்சமே! எனவினைமுடிபுசெய்க.

பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை

முற்றும்.



# அருஞ்சொற்பொருள்.

அ.

அகவ-இசைக்க, கடுகூ
அகழ்க்குவன்-கல்லுவன், உஎக.
அங்கி (வடசொல்) -தீ, டுச.
அசை-கட்டிய, களடு.
அசைஇ-இருந்து, உடுக.
அசைவு-இளைப்பு, கஉச.
அஞ்சுவர-அச்சம் உண்டாக, உடுஎ.
அட்டி-கொடுத்து, உ0ட ; விட்டு (பரிபாடல்) ; இட்டு (திருமுருகாற்றுப்படை) ; மிகவிட்டு (பெரும்பாணாற்றுப்படை).
அட்டில்-அடுக்களை, சஉ, உகூஉ.
அடம்பு-அடப்பங்கொடி, கூடு ; பாலிகை (பிங்கலந்தை)
அணங்கு-தெய்வம், அஎ ; வருத்துந் தன்மை, கஉச ; வருத்தம், உகூஅ.
அணை-தறி, ஙக.
அதிர-முழங்க, கடுஎ.
அந்தி-மாலைப்பொழுது, உசஎ.
அமரர் (வடசொல்)- தேவர், கஅச, உ00.
அயர்-செய்யும், கொண்டாடும், உகடு.
அரண்-காவலிடம், காவலிடமாய்க்கொண்டு நின்ற வீரனை உணர்த்தியது ஆகுபெயர், எகூ.
அரிமா-சிங்கஏறு, உகூஅ.
அருங்கடி-அரியகாவல், கஙங.
அருங்கடிவரைப்பு-அரிய காவல் அமைந்த மதில், உகூக.
அருத்தி-நுகர்வித்து, உ00.
அருவாளர்-அருவாள நாட்டின் அரசர், உஎடு.
அலவன்-நண்டு, க0க.
அவிர்-விளங்கு, கூச.
அறம்-நல்வினை, சங ; பிங்கலந்தை.
அறுகை-அறுகம்புல் ; ஈற்றில் நின்ற ஐசாரியை, உடுகூ.
அறு கோட்டு இரலை-அறுப்பறுப்பான கொம்புள்ள கலைமான், உசடு
அறை-பாசறை, உஙஎ.

ஆ

ஆக்கம்-நுகர்ச்சிப் பொருள்கள், ககக.
ஆங்கண்-அவ்விடம், அங்கண் என்பது நீண்டது, கஉ.
ஆண்டலை-கூகை கோட்டான் இனத்தைச் சேர்ந்த ஒருபறவை ; இதன் தலை ஆண்மக்கள் தலை போறலின் இப்பெயர் பெற்றது ; இதனைக் கோழி என்பர்பிங்கலந்தையுள்; உடுஅ.
ஆயம்-கூட்டம்,உகங; திவாகரம்

ஆரம்-சந்தனக்கட்டை, கஅஅ.
ஆலை-கொட்டில், கருப்பஞ்சாற்றைக் காய்ச்சும் இடம், கூ.
ஆவணம்-அங்காடித்தெரு கடுஅ.
ஆவுதி (வடசொல்) -வேள்வி, ௫௫, உ௦௦.
ஆன்-பசுமாடு, உ௦க
ஆறு-இடையறாது, ஆறுதுளன்னும் வினையெச்சத் தீறுதொகுத்தல், உகூஉ.

இ

இகல்-மாறுபாடு, எஉ.
இருத்து-தொங்கவிட்டு, தாழவிட்டு, உ௫க.
இடைகழி-ரேழி, கசஈ; "இடைகழிநின்றவெண்ணே" என்றார் சீவக சிந்தாமணியினும், ௩கக.
இணர்-குலை, பூங்கொத்து, கஅ.
இயம்ப-ஒலிக்க, க௫எ.
இயல்-தன்மை, கசகூ.
இரலை-ஆண்மான், புல்வாய், உசரு; "இரலையுங் கலையும் புல்வாய்க் குரிய" தொல். மரபியல், சச.
இரியல்-விட்டுப்போதல், ௫கூ; எச. 'நீங்கல்' சிலப்பதிகாரம், அந்தி மாலைச் சிறப்புச்செய்காதை, ௫உ.
இரு-பெரிய, ௫கூ, கூக.
இருக்கை-இருப்பு, களச, உகஉ.
இருங்கோவேள்-துவரை நகரில் அரசாண்ட வேளிர் மன்னரில் ஒருவன், உஅஉ; புறநானூறு, உ௦க, உ௦உ.
இளக்கும்-அசைக்கும், களஉ.
இவர்-ஏறிப் படர்ந்த, உ௩ச; திவாகரம்.
இறவு-இறாமீன், கூடு.
இறைவன்-அரசன், கஉ௦.

ஈ

ஈண்டி-திரண்டு, நெருக்கு, க௩உ.
ஈழம்-சிங்களம், இலங்கை, ககூக.

உ

உகளல்-குதித்தல், தாண்டல், கசக, உச௫; பிங்கலந்தை, உகஅகூ; பாய்தல், திவாகரம்.
உகிர்-நகம், கச௦.
உருத்தல்-வார்த்தல், ககூகூ; சிந்துதல், திவாகரம்.
உணங்கு-உலருகின்ற, உஉ, அ௩.
உரவுத்திரை-உலவும்அலை, க௦க; இப்பொருட் டாதல், புறப்பொருள் வெண்பா மாலை பாடாண்படலம் "சூடியவான் பிறை" என்னுஞ்செய்யுளுரையிற் காண்க.
உரு-வடிவு, ௩கூ; அழகு, ககூஉ.
உல்கு-சுங்கம், கஉ௫.
உலாய்-உலாவி, உ௩க.
உவவு முழுமதிவிளங் நம்நாள் கூக
உழிஞை-சிறுபூளை, உ௩௫; திவாகரம் பிங்கலந்தை; இத

னைக் 'கொற்றன்' என்பர் புறநானூற்றுரைகாரர்.
உறந்தை-உறையூர், உஅ௫.
உறழ்-வாது, மாறுபாடு, கஎக.
உறை-மண்ணால் வட்டமாய் வனைந்து கிணற்றினுள் அமைக்கப்படுவன, எசு.
உறைக்கும்-துளிக்கும், சொரியும், க௫உ; உறை, துளி, திவாகரம்.

ஊ

ஊட்டும்-ஏறப்பண்ணும், ௫o
ஊழ்-முறை, உஉஎ
ஊன்-தசை, கஎஎ.

எ

எஃகு-வேல், எஅ.
எக்கர்-இடுமணல், ககஎ.
எடுப்பி-துரத்தி, ஓட்டி, உ௩௬.
எய்தி-பெற்று, உஉஎ.
எயில்-மதில், உஎஅ, உ௬க.
எயினர்-வேடர், உசுசு.
எழில்-அழகு, உ௩க.
எறிப்ப-ஒளிவீச, உகூஉ; "எறித்தரு கதிர்தாங்கி" கலித்தொகை, கூ.
எறுழ்-வலிமை, உ௬ச.

ஏ

ஏகினும்-சென்றாலும், உ.
ஏமாப்ப-மகிழ, கக௫; "காமர் நெஞ்ச மேமாந்துவப்ப" என்றார் புறநானூற்றினும்.
எய்க்கும்-ஒக்கும், கoச
எழகம்-ஆட்டுக்கிடாய் க௪௪; இச்சொல்'மேழகம்'எனவும்வரும், பிங்கலந்தை, உசஅஉ.
ஏறு-எருது, சசு.
ஏற்றை- ஆண்நாய், கசo.

ஒ

ஒக்கல்-சுற்றம், சுக, உகச.
ஒருவேம்-நீங்கேம், பிறழமாட்டேம், உகo; திவாகரம்.
ஒல்க-சாய, உ௫o.
ஒள்ளெரி-ஒளிபொருந்திய நெருப்புவெளிச்சம், ககக.
ஒளியர்-ஒளிநாட்டார், உஎச.

ஓ

ஓக்கிய- ஓச்சிய: செலுத்திய, உகசு; எடுக்கப்பட்ட, புறநானூறு, சுகூ; புறப்படவிட்ட, சிந்தாமணி, உக௫௩.
ஓதம்-ஈரம், கூஅ; பிங்கலந்தை, ௩உ௫o; ஆலை, கூஅ; புறப்பொருள் வெண்பாமாலை "ஓதநீர்வேலி"
ஓம்பி-பாதுகாத்து, உoக.
ஓர்க்கும்-செவிதாழ்த்துக் கேட்கும், உ௫ச; புறநானூறு, க௫எ.
ஓர்த்தும்-கேட்டும், கக௩.
ஓரி-முதுநரி, உ௫எ; திவாகரம், பிங்கலந்தை.
ஓவம்-சித்திரம், [redacted]

க

கடி-அச்சம், ௫எ; காவல், உ௨க, உ௩௬, உ௬௧.
கடிந்தும்-நீக்கியும், க௧௧.
கடியரண்-காவலமைந்த அரண், உ௨க.
கடை-தலைக்கடை, தலைவாசல், உ௬க.
கடைக் கங்குல்-கடை யாமம், க௧௫.
கண்-இடம், உசஉ.
கண் அடைஇய-கண் அடைத்த : கண் துயின்ற, க௧௫.
கண்ணி-ஆடவர் முடிமேற்சூடும் மாலை, கOக.
கணம் (வடசொல்) -தொகுதி, உ௫க.
கதிர்ச்செல்வன்-பகலவன் க௨உ
கதிர்ப்ப-ஒளி விட, உ௫எ; 'கதிப்ப' எனப்பாடங்கொள்ளுதலுமாம், என்னை ? காரைக்காலம்மையார் மூத்ததிருப்பதிகத்தில் "ஊமைக் கூகையும் ஓரியும் உறழ்ந்தழ் கதிக்கும் " என்றாராகலின்.
கதுப்பு-மயிர், உ௫க.
கதுவும்-பற்றும், உஎஅ; கவரும், புறநானூறு, கஅ.
கந்து-அருட்குறி : சிவலிங்கம், 'தெய்வம் உறையுந்தறி' என்பர் நச்சினார்க்கினியர், உசக.
கமழ்-மணக்கும், க.
கமுகு-பாக்குமரம், கஎ.
காரம்-முதலை, உசஉ.
கருந்தலை-பெரியதலை, உ௩O.
கருங்தொழில்-வலிய தொழில், ௬உ.
கலம்-படைக்கலம், எO.
கலி-மனஎழுச்சி : மனச்செருக்கு, ௩உ, ௬உ.
கலித்த-செருக்கிய, செருக்கித்திரிந்த, உசஉ
கலித்து-தழைத்து, க௧௬; "தூவற்கலித்த" புறநானூறு, உச.
கவான்-மலைப்பக்கம், பக்கமலை, க௩அ.
கவி-கவிந்த : வளைந்த, க௫௩ ; மூடிய, க௬எ.
கவிய-'இடிய' நச்சினார்க்கினியர் பொருள், உ௨௩.
கவின்-அழகு, கO, உ௬க.
கழல்-காலின் அணி, உ௧ச; திவாகரம்.
கழனி-வயல், அ.
கழி-உப்பங்கழி, ௩உ.
களரி-சண்டை யிடு தற்குச் சமைந்த இடம், ௫க; திவாகரம், பிங்கலந்தை.
கறி-மிளகு, கஅ௬.

கா

கா-சோலை, ௫௩.
காதல்-தலைவனுந்தலைவியும் ஒரு

வரையொருவர் இன்றியமை யாராய்த் தமக்குட் பாராட்டும் பேரன்பு, கഠ௩ ; " காமத்துச் சிறந்ததுகாதலையுடைய காமம்; அஃதாவது மெய்யுற்றறியாதா ரிருவர் அன்பொத்துப் பான் மைவகையால் தாமே மெய்யுற் றுப் புணரும் புணர்ச்சி" என் பர்பரிமேலழகியார்,பரிபாடல், கூ-ஆம்பாடலுரை.
காந்தள்-கார்த்திகைப்பூ, கடு௩.
காப்பு-மதில்,சக ; சுங்கச்சாவடி, க௩ ௩ ; காவல், கஅச, புறநா னூறு, கச.
காய்-எறிக்கும்,கஉஉ;சீவகசிந்தா மணி, சஎ௩.
கார்-நீர் : பச்சை, கூ.
கால்-கால்கள், தூண்கள், ககக ; உருளை, உருளையுடையவண்டி யை உணர்த்திற்று, கஅகூ ; 'கால்' உருளை என்னும் பொருட்டாதல், " கால்பார் கோத்து" என்னும் புறப்பாட் டுரையுள்ளுங் காண்க. இனிக் 'கால்.' வழியென்றுமாம்.
காழ்-கோல்,அဝ, ககூஎ; வயிரம், உஉஉ ; திவாகரம்.
காழகம்-கடாரம் என்னும் ஊர், (பர்மா ? Burma ?), கககூ.
கான்யாறு-காட்டியாறு, கககூ.
கானம்-காடு, ௩ဝဝ.
கானல்-கடற்கரைச்சோலை,கூச; திவாகரம், பிங்கலந்தை.

கி

கிடக்கை-பரப்பு, ௩எ.
கிடுகு-கேடகம், எஅ ; " வார் மயிர்க்கிடுகு" என்பதற்கு நச்சி னார்க்கினியருரைத்த பொருள் காண்க, சீவக சிந்தாமணி, உஉகஅ ; சட்டம், ககூஎ.
கிளை-சுற்றம், கூக, கககூ.

கு

குடமலை-குடகுமலை, கஅஅ.
குடவர்-குடநாட்டார் : மேனாட் டார், உஎகூ.
குணகடல்-கிழக்குக்கடல்,கஅகூ.
குரம்பை- குடிசை, கககூஅ ; பிங் கலந்தை.
குருளை-குட்டி, இச்சொல் புலி பன்றி முயல் நாய் நரியென் னும் விலங்கின் பிள்ளைக்குப் பெயராய்வரும்,உஉக.
குருஉச்சுடர்-நிறம்மிக்க விளக் கம், கக உ.
குலைஇ-குவித்து, கஎஅ.
குழல்-புல்லாங்குழல், கடுகூ.
குழவி-கன்று, கச ; பிள்ளை, கூகூ.
குழறல்-கூப்பிடல்,உகூஅ.
குழிகொன்று-குழியைத் தூர்த் து, உஉ௩.
குழீஇ-திரண்டு, கூகூ, உகூடு.

குழை-மகரக்குழை, ௨௩.
குறங்கு-தொடை, ௧௪௬.

கூ

கூடல்-யாறுகடலொடுகலக்குமிடம்: கழிமுகம், ௬௮.
கூடு-நெற்கதிர், ௧௫, ௨௬௭.
கூதாளம்-'வெண்டாளி' என்பர் நச்சினார்க்கினியர், அ௫; வெண்டாளி ஒருசெடி; பிங்கலந்தையிலும் திவாகரத்திலும் இது கொடிவகையிற் சேர்க்கப்பட்டிருக்கின்றது.
கூப்பி-குவித்து, ௧௫௪.
கூம்ப-குன்ற, ௨௭௬; 'ஒடுங்க' பிங்கலந்தை
கூம்பு-பாய்மரம், ௭௫.
கூழ்-பல்வகை உணவு, ௧௬௩; திவாகரம்.
கூளி-பேய்க்குப் பொதுப்பெயரான இச்சொல் இங்கே ஆண்பேயை உணர்த்துகின்றது, ௨௫௬.

கெ

கெழு-பொருந்தின, ௩௬, ௧௬௨.
கெழுமி-பொருந்தி, ௪௭.

கே

கேணி-கிணறு, ௫௧; திவாகரம்.
கேள்வி-நூற்கல்வி, ௧௬௬; திவாகரம்.

கொ.

கொடுங் கால்-வளைந்த சுற்று, ௨௩; வளைந்தகால்கள் (Arches தலைவளைந்த தூண்கள், ௨௬௧.
கொடுந்தாள்-வளைந்தகால், ௧௪௦.
கொடுந் திண்ணை-சுற்றுத் திண்ணை, ௧௪௩.
கொடுந்திமில்-முன்வளைந்தகட்டுமரம், ௧௧௨; 'திமில்' தோணி என்பர் திவாகரத்தில்.
கொடுமேழி-வளைந்த கலப்பை, ௨௦௫.
கொடுவரி-வளைந்த வரிகளையுடைய புலி, ௨௨௧.
கொண்டி-கொள்ளப்பட்ட மிகுபொருள், ௨௧௨; கொண்டி மகளிர்-சிறையாகக் கொண்டுவந்த பெண்கள், ௨௪௬.
கொண்மூ-மேகம், ௬௫.
கொழிக்கும்-தெள்ளித் தொகுக்கும், ௭; திவாகரம்.
கொள்ளை-விலை, ௨௯.

கோ.

கோட்டம்-கரை, கோயில், ௩௬.
கோடியர்-கூத்தர், ௨௫௩; திவாகரம்.
கோடு-கொம்பு, அ௬.
கோதை-மகளிர் அணியும்மாலை, ௧௧௦; ௬-ஆம்பரிபாடல் பரிமேலழகியா ருரையிலுங் காண்க.
கோதையர்-மாலையணிந்த மகளிர், அ௫.
கோன்-குலை, ௧௬; "செழுங்

கோள்வாளை" புறநானூறு, ககூஅ.

கோள்மீன்-கிரகம், கூஅ.

ச

சமம்-போர், உடூஅ; போர்க்களம், இனியது நாற்பது, கூ

சா

சாம்பும்-வாடும்,கஉ; "கின்னரர் சாம்பினுரே" சீவகசிந்தாமணி, எஉஅ.

சாய-குறைய, உஅஉ

சாயல்-மென்மை, கரு௧ ; தொல்காப்பியம், உரிச்சொல்லியல், உஎ.

சாற்றி-சொல்லி, உகூ.

சாறு-திருவிழா, உகரு.

சி

சிமையம்-மலை யுச்சி: குவடு, கடூஅ.

சிவல்-கௌதாரி, எஎ; பகண்டையுமாம்; திவாகரம்.

சினத்த-கோபத்தினை யுடைய, கஉஉ.

சீறி-மிகச்சினந்து, உஎஎ; திவாகரம்.

சு

சுடர்-ஒளி, உக.

சுறவு-சுறாமீன், அக.

சூ

சூடு-சுடப்பட்ட தசை, கூடு; "குறுமுயற் கொழுஞ்சூடு" என்புழியும்இப்பொருட்டாதல் காண்க, புறநானூறு, நச.

செ

செயிர்த்து-சினந்து,உஅ0; 'குற்றத்தைஎண்ணிப்பார்த்து' என்றுரைப்பினுமாம்; இச்சொற்கு இருபொருளுமுண்மை, "செயிரே குற்றமுஞ் சினவலுமாகும்" என்னுந் திவாகரசூத்திரத்தாலுணர்க.

செரு-சண்டை : போர், எஉ.

செருந்தி-கோரைப்புல், உசடு ; வாட்கோரையுமாம், திவாகரம், பிங்கலந்தை.

செல்லா-கெடாத, கஅச.

செவ்வேள்- முருகப் பிரான், கருச.

செற்றோர்-பகைவர்,உஉஅ; பிங்கலந்தை.

செறி-நெருங்கின, கநிச.

செறு-வயல், கக, உசச.

சே.

சே-சிவந்த, கசக.

சேக்கும்-தங்கும், ருஅ, உசக.

ஞ

ஞமலி-நாய், கச0

ஞா

ஞாயில்-அம்பெய்தற்கு மறைவாய் மதில்மேல் அமைக்கப்படுவது, உஅஅ ; இதனை "மீன்

பூத்தன்னவுருவஞாயில்" என்பர் ஐயூர் மூலங்கிழார், புறநானூறு, உக; "ஏவறை" என்பர் புறப்பொருள் வெண்பாமாலையுரைகாரர், உழிஞை, ரு; "குருவித்தலை" என்பர் அடியார்க்குநல்லார், சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, உகஎ-ஆம் வரி

த

தகர்-யாட்டுக்கடா, எஎ, கசக.
தகை-உள்ளடக்கின, ருக; 'கட்டப்பட்ட' என்று உரைப்பினுமாம், "ஓங்குநிலைவாயிற் றூங்குபு தகைத்த" என்பதனுரையிற் காண்க, பரிபாடல், உஉ.
தட-பெரிய, ௩௦க; "தடவுங்கயவும் நளியும்பெருமை" தொல்காப்பியம், உரியியல், உச.
தடிந்து-அறுத்து, கஎசு; பிங்கலந்தை, உகசரு.
தண்-குளிர்ந்த, கசுச.
தண்டலை-பூஞ்சோலை, ௩௩.
தலை-இடம், உ௩௯.
தலைமணக்கும்-ஒன்று கலக்கும், ௬எ.
தலைமயங்கிய- ஒருங்கு கலந்த, கக௩.
தவ-மிக, உ௩௯; தொல்காப்பியம், உரியியல், ௩.
தளி-நீர்த்துளி, ௩; 'தளி' தலைப்பெய்மழைத்துளியென்பர் பிங்கலந்தையில்.

தா.

தாது-பூந்தாது: மகரந்தம், கருஉ.
தாஅய்-பரந்து, கருரு.
தாயம்-உரிமை, உஉஎ.
தாழ்-தங்கும், ரு௩; தாழக்கோல், கசுச.
தாழ்ந்த-வளர்ந்து நின்ற, அச.
தாழை-தாழஞ்செடி, அச.
தாள்-அடி, கீழ், அச; முயற்சி எனினுமாம், உஎஅ.
தானை-படை, உஎகூ.

தி

திட்டை-மேடு, மேட்டுக்குப்பம், சுo.
திணை-'திண்ணை' என்பதுநடுவே தொக்கது, உசு௩.
திரிதரு-திரியும், சுஎ.
திரிபுரிநரம்பு-முறுக்குதல் செய்தநரம்பு, உருச; "திரித்து முறுக்கின நரம்பு' என்று உரைப்பினுமாம்; மணிமேகலையினும் 'திரிபுரிவார்சடை' என்றூர், கசஅ-ஆம்பக்கம்.
திரு-திருமகள், சக.
திருநிலைஇய-வீரத் திருநிலைபெற்ற, உகக.
திரை-அலை, கஎ௩.
திளைப்ப-தழுவ: புணர, உகூசு; "இளஅனங்கன்னிகாரரையைத்

திளைத்தலின்" என்புழியும்இப் பொருட்டாதல்காண்கசீவகசிந் தாமணி,நாமகளிலம்பகம், ருo.
திறல்-வலிமை, ருசு, உஎஎ.

தீ

தீங்தொடை-இனியயாழ் இசை உருச; தொடை-யாழ் நரம்பு, புறநானூறு, எo; இங்கேநரப் பிசையை உணர்த்திற்று.
தீம்புகார்-காட்சிக் கினிய காவி ரிப்பூம்பட்டினம், கஎங.

து

துகள்- நுண்பொடி, சஎ.
துகிர்-பவளம், கசஅ, ௩அகூ.
துகில்-வெள் ளாடை, கஎ; 'வெண்பட்டு' என்பர் சீவகசிந் தாமணி உரையில்,உசுசுசு.
துகிற்கொடி-வெள்ளிய துணி யாற் செய்த கொடி, கசுஅ; 'துகிற்கொடி'வெண்மை செம் மை இரண்டற்கும் பொது வென்பர் சீவகசிந்தாமணியுரை யில், ஙச.
துச்சில்-ஒதுக்கிடம், ருஅ; "துச் சிலிருந்துதுயர்கூரா" என்பது இனிதுநாற்பது, சo.
துஞ்சி-உறங்கி, ககூரு.
துஞ்சும்-தங்கும், சக; "அறந் துஞ்சுஞ்செங்கோலையே" புற நானூறு, உo.
துடி-உடுக்கை,பாலைப்பறைஉகூரு
துடுப்பு-கணு, கருங.
துணை-கணவன், கoசு.
துப்பு-வலிமை, உகூஅ.
துய்த்தும்-நுகர்ந்தும், ககச.
துயில்-உறக்கம், கரு.
துவன்று-நிறைந்த, நெருங்கிய, கஎச, உகஉ; "துவன்றுநிறை வாகும்" தொல்காப்பியம்,உரிச் சொல்லியல். ஙச.
துறக்கம்-வானுலகு, கoச
துறுகல்-பொறைக்கல்,சிறுகுன் று, உஙச; "புலவுசேர் துறு கல்" என்றார்ஐங்குறுநூற்றில், உகo.
துறைபோகிய-முற்றக் கற்ற க்சுகூ;துறைபோகலின்-முற்ற முடித்தலின், உஎங.

தூ

தூ- தூய, ககஎ.
தூஉய்- தூவி, உருஉ; "மலை வான் கொள்கென உயர் பலி தூஉய்" புறநானூறு, கசங.
தூங்கு-அசையும், கஎச.
தூசு-கூறை, கசஅ.
தூதுணம்புறவு- தூதுஉண் அம் புறவு எனப்பிரித்துச் 'சிறுகல் லைத்தின்னும் அழகிய புறா' எனப்பொருளுரைக்க; "தூது ணம்புறவெனத் துதைந்தநின் னெழினலம்" என்றார் கலியி னும், ருசு.

தூறு-சிறுசெடி, உருச.

தெ

தெவ்வர்-பகைவர்,உககக; "தெவ் வுப்பகையாகும்" தொல். உரி. ருo.

தெறுவு-சுடுதல், கo ; "தெறுக திர்க்கனலி"* என்பது புறநா னூறு, சரு.

தென்னவன்- பாண்டியன், உஎஎ.

தே

தேஎம்-நாடு, தேயம், உகசு.

தேம்ப-வாட, ச.

தேறுநீர்-தெளிந்தநீர், கூஎ.

தொ

தொக்காங்கு-கூடினாற் போல, உகரு.

தொட்டு-அகழ்ந்து, தோண்டி, உஅச.

தொடி-கடகம், கருச,

தொடுதோல்-செருப்பு, உகூரு.

தொடை-படி, கசஉ.

தொல்சீர்-பழையசிறப்பு, கoச.

தொல்லிசை- தொல் இசை, அடிப்பட்டபுகழ், கஉக.

தொலைத்த-அழித்த, உஉகூ.

ந

நகர்-வீடு,உo, 'மாளிகை' என்பர் புறப்பொருள் வெண்பாமாலை உரைகாரர்,பொதுவியற் பட லம், கo ; கோட்டம்: கோயில், ருள, "மூக்கட் செல்வர் நகர்வ லஞ் செயற்கே" என்றார்புறநா னூற்றினும், சு.

நசை-விருப்பம், உoரு.

நடுகல்-இறந்துபட்ட மறவனை நினைவு கூர்தற்கு நட்டகல், எகூ ; இங்ஙனங் கன்னடுதலைப் "பாலுடைமருங்கின்" என் னும் புறப்பாட்டிற்காண்க.

நடுவு-நடுநிலைமை, உoஎ.

நண்ணார்-பகைவர், உஉரு.

நந்தா-அவியாத, உசஎ.

நயந்தும்-விரும்பியும், ககரு.

நறவு-கள், கஅo.

நறு-நல்ல, ருரு.

நன்பகல்-உச்சிப்பகல், உகூஅ ; புறப்பொருள் வெண்பாமாலை உரை,வஞ்சிப்படலம், ச.

நனந்தலை-அகன்றஇடம், கசுரு; தொல்காப்பியம், உரி யியல், எஅ.

நனி-மிகுதி, கஅக ; தொல்காப் பியம், உரியியல், ரு.

நா

நாடி-ஆராய்ந்து, உoகூ.

நாண்மீன்-நட்சத்திரம், சுஅ.

நாப்பண்-நடு, அக, ககூச.

நாவாய்-மரக்கலம், கஎச.

நி

நிரைத்து-வரிசையாக வைத்து எஅ.

நிலைஇய-நிலைபெறற்குக் காரணமான, சஉ.
நிறீஇ- நிலைபெறச் செய்து உஅசு.

நு

நுகம்- வண்டிமாட்டுகளின் பிடரிற்றங்குங் குறுக்குக் கட்டை, இதனை 'நுகத்தடி' என வழங்குப, உ0சு.
நுதல்-நெற்றி, உக.

நெ

நெய்தல்-குவளைப்பூ, கக.
நெருஞ்சி-ஒரு முட் பூண்டு, உருசு.

நே

நேரிழை-ஏற்றஅணிகலம், உஉ; பரிபாடலுரை, கக.

நொ

நொடை-விலை, கஅ0.
நோன்-வலிய, உஎஅ.

ப

பஃறகைப்பு-'பல் தகைப்பு' பல பகுதிகள்; பலகட்டுகள், கசரு.
பஃறி-படகு, ரு0; 'தோணி' என்பர் திவாகரர்.
பகடு-பெருமை, 'பகட்டெருத்து' பெரிய எருது, இஉ, கசஎ; பேரெருது, உ0க.
பகர்ந்து-வெளியாகச் சொல்லி, உகக.
பகல்-நுகத்தின் நடுவிற் றைத்த ஆணி; உ0சு.
பசும்பதம்-பசியசோறு, உ0ரு.
படப்பை-தோட்டம், ருஉ; பிங்கலந்தை, எ0க.
படிக்கால்-ஏணி, கசஉ; "வானுலக மேறுதற்குச் செம்பொன், இருளில் படிக்கால்" என்றார் சீவகசிந்தாமணியிலும், உஅஎஉ.
பண்ணியம்-பண்டம், உ0ரு; "சூரங்கருந்து பண்ணியம்" என்னும் பரிபாடலுரையிற்பரிமேலழகர் இப்பொருளே கூறுதல் காண்க, கச.
பணிபு-தாழ்ந்து, உஎச.
பணியம்-பண்டம், 'பண்ணியம்' பணியம் எனநடுவேதொக்கது, கஙச.
பணை-குதிரைப்பந்தி, இலாயம், ருக; மருதநிலம், உருக.
பதாகை (வடசொல்)- பெருங்கொடி, கஅஉ.
பம்பி-அடர்ந்தெழுந்து, உருசு; "கதித்தல் பம்மல் கஞறல் கன்றல், எழுச்சியின் மிகுதிக்கெய்தும் பெயரே" என்றார்திவாகரரும்.
பரதவர்-செம்படவர், நுளையர், கூ0; "கடலோடுழந்த பனித்துறைப்பரதவ" என்றார் பதிற்றுப் பத்தினும், சஅ.
பரி-செலவு, செல்லுதல், கஅரு;

"நிமிர்பரியமா" என்புழியும் இப்பொருள் காண்க, புறநானூற்றுரை, கச.

பருவம்-பொழுது, கஉஅ; வடசொல்.

பரோர்-'பருவர்' பெரிய அழ்கு, உகச.

பலி-தேவருணவு, கசுரு; வடசொல்.

பள்ளி-தவத்தோர் இருப்பிடம், ருட; இப்பொருட்டாதல்புறப்பொருள் வெண்பாமாலையுரையிலுங் காண்க, வஞ்சிப் படலம், கூ.

பறழ்-பன்றிக்குட்டி, எரு; "குட்டியும் பறழுங்கூற்றவண்வரையார்" என்னுந் தொல்காப்பிய மரபியற் சூத்திரத்தால்பன்றிக்குட்டியும் பறழ் எனப்படுதற்குரித்தாதல் காண்க.

பா

பாகு-குழம்பு, கசுசு.

பாசிழை-'பசுமை'இழை' பசிய அணிகலன், கசஎ.

பி

பிடி-பெண்யானை, உஉச.

பிணர்-பொரிந்த வடிவு: சருச்சரை, அகூ.

பிணி-கட்டு, வார்க்கட்டு உகட.

பிணிக்கும்-கட்டும், டக.

பிணியகம்-சிறைக்களம், உஉஉ.

பிணை-மானினத்திற் பெண், உசரு; தொல். மரபியல், ருஎ.

பிழி-கள், அகூ.

பிளிறு-முழங்கும், உநசு.

பிறங்கு-விளங்கும், உஅரு; உயர்ந்த, "பிறங்குநிலை மாடத் துறந்தையோனே", புறநானூறு, சுகூ.

பீ

பீடு-பெருமைத்தன்மை, உஉஉ.

பு

புகர்-நிறம்: பச்சென்றநிறம், எச; திவாகரம்.

புணரி-கடல், கூஎ.

புதவம்-அறுகு, உசட; ஒருவகைப்புல் என்பர் பிங்கலந்தையுள்.

புதவு-வாயில், களகூ; "பூரித்துப் புதவந்தோறும்" என்றார்சீவக சிந்தாமணியினும், உருசட.

புதை-அம்புக்கட்டு, உஅஅ.

புயல்-மழை, ச

புரவி-குதிரை, உச.

புலம்-நிலம், கஉ.

புலம்பெயர்-தம் நிலத்தைக் விட்டுவந்த, உகஎ.

புலவு-புலால், புலால் நாற்றம், கூச.

புலிப் பொறித்து- புலியினுருவை இலச்சினையாக இட்டு, கடுரு.

புழுக்கு-புழுக்கின இறைச்சி, சுசு; "யாமைப் புழுக்கின்" என்றார் புறநானூற்றினும், உகஉ.

புழை-சிறுவாயில், கசச, உஅ௭; திவாகரம்.

புறக்கொடாது-முதுகு காட்டாது, அதாவது பின்னிடையாது, எக, உகா.

புறம்போக்கி-வெளியே போகவிட்டு, கந௫.

புறவு-புறம்பு, ௫௩.

புன்றலை-சிவந்த மயிரினையுடையதலை, புல்-புற்கென்ற நிறம், பழுப்புநிறம், கூ௦; "தில்லையன்ன புல்லென் சடையோன்" என்னும் புறநானூற்றுரையிலும் உ௫உ, "சிறுபுன் மாலைதலைவரின்" என்னும் புறப்பொருள் வெண்பாமாலை, கைக்கிளைப்படலம், ௩-ஆஞ் செய்யுளுரையிலும் இப்பொருட்டாதல் காண்க; 'புற்கு' பொன்னிறம் புகர்நிறம் இரண்டிற்கும் பெயராமென்பர் திவாகரர்.

புனல்-நீர், எ.

பூ

பூதம்(வடசொல்)-குறள், ௫எ.

பூளை-மெல்லியபஞ்சினைத்தரும் ஒருசெடி, இது பெரும்பூளை சிறுபூளை என இருவகைத்து, இங்கிது 'பெரும்பூளை' யினைக் குறிக்கின்றது, உ௩௫.

பெ

பெண்ணை-பனை, கஅ, அக.

பே

பேஎது-எண்ணாது, கருதாது, கக௬; திவாகரம்

பேணி-போற்றி, வழிபட்டு, உ௦௦.

பேம்-அச்சம், உ௫௫; தொல்காப்பியம், உரியியல், ௬க.

பொ

பொதிமூடை-பொதிந்து வைக்கப்பட்ட மூட்டை, க௩எ.

பொதியில்-அம்பலம், உ௪க; திவாகரம், பிங்கலந்தை.

பொதுவர்- இடையர், உஅக.

பொர-சண்டையிட, ௪௬.

பொருத-உரிஞ்சிய, உக௪; "கறுழ்பொருத செவ்வாயான்" என்புழியும் இப்பொருட்டாதல் காண்க, புறநானூறு, ௪.

பொழில்-தோப்பு, சோலை, ௩௩.

பொறி-அடையாளம், ௬௦; மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறி, க௦உ.

பொறித்து-அடையாளமாக அல்லது இலச்சினையாக இட்டு, க௩௫.

பொன்ற-அழிய, மாய, உஅக; திவாகரம்.

போ,
போகுஇடைகழி-பெரிய இடைகழி, கசச ; "போகிதழ்" என்பதற்கு 'நீண்ட இமை' எனப் பொருள் உரைப்பர் புறப்பொருள் வெண்பாமாலையுரைகாரர், கைக்கிளைப் படலம், ங.
போந்தை-பனை, எச.
போர்க்கதவு-வாய் பொருந்தின கதவுகள், சo.

ம

மகிழ்ந்தும்-உண்டும், கoஅ; இஃதிப்பொருட்டாதல் "வாங்கமைப்பழுநியதேறன் மகிழ்ந்து" என்னும் புறநானூற்றுரையிற் காண்க, கஉக. 'மகிழ்' தேறலென்றும் பொருள் படுமாகலின், இப்பெயரிற் பிறந்த 'மகிழ்ந்து' என்னும் வினை 'தேறல்உண்டு'என்னும்பொருளில் வரும். 'மகிழ்' தேறலை உணர்த்துதல் "மழையென மருளும் மகிழ்செய்மாடத்து" என்னும் பொருநராற்றுப் படையடியினுங் காண்க.
மஞ்சிகை-பேழை, ககங; திவாகரம். மஞ்சிகை வடசொற்போலும்.
மட்டு-கள், கoஅ.
மடம்-அறியாமை, கள்ளம் அறியாமை, உக.
மடிந்து-தொழில் செய்யாது சோம்புதல், கூங.
மணி-செம்மணி, கஅஎ; "மண்ணார்மணி" எனப் பரிபாடலிற் (கo) கூறப்படுதலின், கழுவுதல் எனப்பொருடரும் 'மண்' என்னும் முதனிலையிற் றோன்றிய திச்சொல்.
மதன்-யானைமதம், உஎஅ.
மதி-திங்கள், ஙரு; மதித்தறிதல், கஙசு, இப்பொருளில் 'மதி' வடசொல்.
மது-தேன், காமத்தேன், கoஅ, வடசொல்.
மாபு-முறைமை, கoரு; "ஈண்டு செலன் மாபின்" என்னும்புறநானூற்றுரைகாண்க, உரு.
மருங்கு-பக்கம், உஎo; கிளைஞர், உஅஉ.
மருப்பு-கொம்பு, உஉக.
மலர்தலை-அகன்றஇடம், சுக.
மலி-மிகுந்த, கூஅ.
மலைந்தும்-சூடியும், அஅ.
மலையவும்-சூடிக் கொள்ளவும், ககo.
மறம்-வீரம், உஎக.
மறுகு-தெரு, ககங.
மன்-நிலைபேறு, உஎஅ.
மன்றம்-பொது இடம், சுக, உருரு.

மா

மா-கருமை, ௯௬; ௨௪௧; விலங்கு, யாடு, ௧௧அ; குதிரை ௧௨௩; பெருமை, ௨௩௭.

மாசு-அழுக்கு, உப்பு, ௧௦௦.

மாட்டிய- கொளுத்திய, ௨௭௭; "இரும்புலிவேட்டுவன்பொறியறிந்து மாட்டிய" என்றார் புறத்திலும், ௧௧.

மாந்தி-குடித்து, அ௯.

மாயிதழ்-கரியஇதழ், ௨௪௧.

மாரி-மாரிக்காலம், மழையெனினும்ஆம், ௧௨அ.

மால்-பெருமை, மால்வரை-பெரியமலை, ௧௩அ.

மான்பிணை-பெண்மான், ௨௪௫.

மி

மிசை-மேல், ௧௭௫.

மிழற்றும்-நிரம்பாமென் சொற்சொல்லும், ௨௬௪; "தானென்றுமிழற்றும்" எனவும் (௧௬௨௬ "வருத்தம்மிழற்றி" எனவும் (௨௩௩௧) சீவகசிந்தாமணியிற் போந்தமைகாண்க; "நிழற்றலுமிழ்ற்றலு நிரம்பாமென் சொல்" என்றார் திவாகரத்துள்ளும்.

மூ

மூக்கால்-மூன்று உருள்கள், ௨௫.

மூகிழ்-முகைத்த, மூகிழ்த்த, தாமரைமூகை எனினும் ஆம், ௨௧௯.

மூட்டா-இடையூறுபடாத, பிறழாத, ௨௦௪; "நல்லறம், மூட்டுடைத்தாகஇடைதவிர்ந்துவீழ்தலின்" என்றார் பழமொழியிலும், ௩௬௬; குறையாத, ௨௧அ; இப்பொருட்டாதல் "மூட்டின்றொருவர் உடையபொழுதின்கண்" என்புழியுங்காண்க, பழமொழி, ௧௩௪.

மூதல்-அடி, கிழங்கு, ௧௧.

மூதுவாய்-அறிவு வாய்த்தல், ௨௧௪, ௨௯௩.

மூரசு-பறைப்பொது, ௧௯௭; திவாகரம்.

மூரண்-மாறுபட்ட, ௩௭; "கடுமூரண்முதலைய" என்னும்புறநானூற்றுரையினும் இப்பொருள் காண்க, ௩௭; மூரண்களரி-சண்டையிடும் இடம், ௯௧.

மூரல-ஒலிக்க, ௧௯௬; "மூழவுபணைமூரல" என்னும் பரிபாடலுரையையுங் காண்க, ௭.

மூருக்கி-கெடுத்து, தோல்விபெறச்செய்து, ௨௩அ; "தோள்வலிமுருக்கி" என்னும் புறநானூற்றுரையையுங்காண்க, ௧அ.

மூருகு-மணம், ௩௭.

மூழவு-தண்ணுமை, மத்தளம், ௧௯௭.

முற்றிழை-தொழில் முற்றுப் பெற்ற அணிகலம், உ௬௬.
முன்றில்-முற்றம், அ௩, ௧௪௧, ௧௭௭.
முன்னிய-நினைத்த, உ௭௩.
முனை-பகைவரிடம், உ௩அ; 'வேற்றுப்புலம்' புறப்பொருள் வெண்பாமாலையுரை, வெட்சிப் படலம், ௧௭.
முனைஇ-வெறுத்து, ௫௫; "அனை யகமுனைஇ" புறநானூறு, ௫உ; "முனைவுமுனிவாகும்" தொல் காப்பியம், உரியியல், ௬௦.

மூ

மூடை-பொதி, மூட்டை, ௧அ௬; மூட்டையை மூடையென்பது பாண்டிநாட்டுவழக்கு.
மூதூர்-பழையவூர், உ௧௫.

மெ

மெழுக்கு-மெழுகு, ௧௬௬.

மே

மேழகம்- யாடு, ௭௭ [redacted] திவாகரம்.
மேனி-நிறம், ௧௪அ [redacted] திவாகரம்.

[redacted]

மை-குற்றம், ௧௫௧; திவாகரம்.
மைந்தர்-ஆண்மக்கள் (திவாகரம்) இளைஞர்(பிங்கலந்தை), ௧௦௧.

மொ

மொய்ம்பு-வலிமை, ௭உ, உ௭௧,

மோ

மோடு-வயிறு, ௧௪; பிங்கலந்தை.

யா

யாணர்-புதுவருவாய், ௩உ; தொல்காப்பியம், உரியியல் அ௩.
யாழ்-ஓர் இசைக் கருவி, இது பேரியாழ், சகோடயாழ், மருதயாழ், செங்கோட்டியாழ் [redacted] நால்வகைப்படும், ௧௫௬; திவாகரம்.

வ

வசை-குற்றம், ௧; திவாகரம்.
வடமலை-வடக்கேயுள்ள மலை, இமயம்மேருமுதலியன ௧அ௭.
வடவர்-வடநாட்டிலுள்ளவர், ஆரியவரசர், உ௭௬.
வடிமணி-வடித்தமணி, உ௩உ; 'தெளிந்தமணி' என்பர் புறப் பொருள்வெண்பாமாலை யுரைகாரர், பொதுவியற்படலம், ௧௪.
வடு-குற்றம், உ௦அ; பிங்கலந்தை; தவறு, பரிபாடலுரை, உ.
வதியும்-தங்கும், ௧௫; திவாகரம்.
வம்பலர்-புதிதுவந்தோர், உ௪௧ [redacted] 'வம்பு' புதுமைப் பொருட்டாதல் திவாகரத்துட்காண்க.
வயங்கு-விளங்கும், உ௧௧.
வயவர்-வீரர், உ௩உ.
வரி-நிறம், ௩அ; பிங்கலந்தை; வரிமணல்-கரிய நிறத்தினையுடையமணல், அதாவது: கடல் நீர்அரித்த கரியமணல், ௬௦.
வருடை-வருடைமான், ௧௩௧;

குறுந்தொகையுள் "செவ்வரைச் செச்சை வருடைமான் மறி" எனவருதல் காண்க, கஅஎ; திவாகரர் "வருடைசரபம் வரையாடாகும்" என்பர்.
வரை-மூங்கில், கஅ அ; மலை, கஅகூ.
வரைப்பு-எல்லை, கஅங; புறநானூற்றுரை, ங; மதில், உகூக; திவாகரம்.
வலனேர்பு-'வலனெர்பு' வலமாக எழுந்து, கூஎ.
வழி-வழிவந்தார், மரபினர், கால், உஅக; பிங்கலந்தை.
வளவன்-சோழன், கரிகாற்சோழன், உகூக.
வளி-காற்று, தென்றற்காற்று, கஙக, உஎஉ.
வறள்-வறண்ட, நீரற்ற, கூரு; வறள் அடம்பு-வறண்டமணலிலேபடர்ந்த அடப்பங்கொடி, கூரு.
வறுங்கூடு-வறிதாய்ப் போன குதிர், உகூஎ.

வா

வாக்கிய-வடித்தொழுக்கிய, சச; "வாக்கவுக்க தேக்கட்டேறல்" புறநானூறு, ககரு.
வாய்-சாளரம், கருக; மெய்ம்மை, உ௦அ; திவாகரம்.
வாரி-வருவாய், விளைபொருள், ககூ௦; பிங்கலந்தை.
வாரிருங்கூந்தல்-வார் இருங்கூந்தல்: நீண்டகரியகூந்தல், உககூ; தொல்காப்பியம், உரியியல், ககூ.
வால்-வெண்மை, ஈகஅ, ககூரு.
வாவி-குளம், உசச.
வாள்கழித்து-வாட்படைவீரரை ஓட்டி, உஉகூ.

வி

விசிபிணி-வலித்துக் கட்டிய, உகஙு; "மாசறவிசித்தவார்புறு வள்பின்" என்னும்புறநானூற்றுரையையுங்காண்க, ரு௦.
விசும்பு-வானம், ஙச.
விடக்கு-இறைச்சி, கஎகூ; திவாகரம்.
வியல்-அகலம், கருஅ; தொல்காப்பியம், உரியியல், கூகூ.
வியன்-அகலம், அ; 'வியல்' திரிந்தது; தொல். உரியியல், கூகூ.
விராய-கலந்த, கூடிய, கூஅ.
விரைஇ-கலந்து, கலவாநிற்ப, கஅக.
விலக்கும்-தடைசெய்யும், உரு.
விலங்கு-எதிர்இருந்து தடுக்கும், உகூ; இப் பொருட் டாதல் "விலங்குபகைகடிந்தகலங்காச் செங்கோல்" என்பதனுரையிலுங்காண்க, புறநானூறு, உஙு௦.
விழவு-திருநாள், கருஅ.

விழா-திருவிழா, உ௫௫.
விளிப்ப-கூவ, அழைக்க, உ௫அ; திவாகரம்.

வீ

வீழ்-விழுது, அச; "சிதலை தின்ற பட்ட வாலமரத்தை, மதலையாய்மற்றதனவீழூன்றி யாங்கு" நாலடியார், தாளாண்மை, எ.

வெ

வெண்மீன்- வெள்ளி: சுக்கிரன், க.
வெரீஇ-அஞ்சி, எ௯.
வெளில்-யானைகட்டுந்தறி கஎஉ; "களிறிலவாகிய புல்லரைநெடுவெளில்" என்பதனுரையினுங் காண்க, புறநானூறு, கஉஎ; பிங்கலந்தை.
வெறி-வெறியாட்டு, வேலன் ஆடல், அணங்கு ஆட்டு, க௫௫; திவாகரம், பிங்கலந்தை. 'வெறி' யாளிக் கூத்தென்பர் புறப்பொருள் வெண்பாமாலை யுரைகாரர், பாடாண்படலம், சக.
வேலன்-முருகபூசை பண்ணுமவன், வெறியாட்டாளன்.

வே

வேட்கும-ஓமஞ்செய்யும், வேள்விசெய்யும், ௫ச.
வேட்டு-விரும்பி, உ௰ச.
வேட்டம்-மீன்பிடித்தல், கூஉ.
வேலாழி-கடல், ஆகுபெயராற் கடற்கரையை உணர்த்திற்று, ககக; 'வேலாழி' கடலை உணர்த்துதல் "வில்லார் விழவினும் வேலாழி சூழுலகின்" என்னுந்திணைமாலை நூற்றைம்பது, சஉ-ஆம் செய்யுளுரையிற் காண்க. வடமொழியுள் 'வேலா' என்னுஞ்சொற் கடற்கரையை உணர்த்தும்; இனி இதனை வேலா ஆழி எனப் பிரித்துக் கரையுங்கடலுமென வுரைப்பினும் ஆம்.
வைகல்-நாள், கஉச.